28th January 1961]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பாலாறு ஊற்றுக்கும் ஒரு வரம்பு இருக்கிறது. ஆகையால்தான் அதைக் கட்டுப் படுத்தும் விதிகள் இருக்கின்றன. இருந்தபோதிலும் கொஞ்ச காலத்திற்கு முன்பு இந்த விதிகளை எவ்வளவுதூரம் சாத்தியப் படுமோ அவ்வளவுதூரம் தளர்த்தியிருக்கிறோம். ஆனால் இவ்விதியை அடியோடு ரத்து செய்வதாக அரசாங்கத்திற்கு உத்தேசம் இல்லை.

*Beggars*

* 237 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் பிச்சைக் காரர்களை பாதுகாக்க திட்டம் உண்டா?

(இ) அப்படியானால், அதன் விவரமென்ன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ( ) Yes, Sir.

(இ) It is proposed to open two 'Special Homes' for old, infirm, diseased and disabled beggars and two 'Work Houses' for able-bodied beggars in this State at an estimated cost of Rs. 10 lakhs during the Third Five-Year Plan period.

SRI S. M. ANNAMALAI : நம்முடைய மாநிலத்தில் எத்தனை பிச்சைக்காரர்கள் இருக்கிறார்கள் என்று சர்க்கார் கணக்கெடுத் திருக்கிறார்களா? ஆண்டுதோறும் அதிகமாகிவருகிறதா? குறைந்துவருகிறதா? ஆண்டுக்கு ஆண்டு அதிகமாகி வந்தால் அதற்கு அடிப்படையான காரணம் என்ன என்று அமைச்சர் அவர்கள் சொல்வார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப்பற்றிய தகவல் இப்போது என்னிடத்தில் இல்லை.

*Otteri Nullah*

* 238 *Q.*—SRI S. PAKKIRISAMI PILLAI : Will the Hon. the Minister for Works be pleased to state—

(*a*) the amount sanctioned to improve the Otteri Nullah in the Puraswalkam-Perambur area in the City of Madras; and

(*b*) the amount spent in the year 1959–60?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Rs. 70,000.

(*b*) Rs. 40,972.

SRI S. PAKKIRISAMI PILLAI : இந்த ஓட்டேரி நல்லா என்கிற தண்ணீர் கால்வாயில் ஒரு பகுதியை அரசாங்கத்தார் முன்வந்து ரிப்பேர் செய்தாலும்கூட இன்னும் ஒரு பெரிய பகுதி அந்தமாதிரியாகச் சீர்திருத்தம் செய்யும்படியான நிலைமையில் இருக்கிறது. அதையும் சீர்திருத்துவதற்கு அரசாங்கம் யோசிக்குமா என்று அறிய விரும்புகிறேன்.